அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஶ்ரீஜக³த்³கு³ருக்³ரந்த²மாலா

# ॥ अद्वैतानुभूतिः ॥

# ॥ அத்³வைதானுபூ⁴தி: ॥

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத் தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் ஸ்ரீ சங்கரபகவத்பாதா சார்யார் அருளிய கிரந்தங்களில் **அத்³வைதானுபூ⁴தி**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம்போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

**அத்³வைதானுபூ⁴தி**꞉ இதில் கடைசி ஐந்து சுலோகங்களில் ஆத்மஞானி ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திகுரு கிருபையால் தனக்கு ஏற்பட்டுள்ள அத்வைதானுபவத்தை வெளியிடுவதால் இப்பெயர் இதற்கு அமைந்திருக்கிறது. இதில் யாவரும் புரியும் படியான பல லௌகிக திருஷ்டந்தங்களைக் கொண்டு அத்வைதமே வாஸ்தவம் என்பதை நன்கு நிரூபணம் செய்திருக்கிறார். இது மனனத்திற்காக அமைந்த கிரந்தம். இதற்குத் தமிழில் பதஉரையும் கருத்துரையும் எழுதிக் கொடுத்து உதவிய சிருங் கேரிமடம் ஆஸ்தான வித்வான் திருநெல்வேலி ப்ரஹ்மஸ்ரீ **P.S. மஹாதேவ சாஸ் திரிகள்** அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கி றோம்.

ஸ்ரீ பகவத்பாதாள் அருளிய உயர்ந்த இந்த நூல் சிறந்த முறையில் வெளி வரும்படி பரமானுக்ரஹம் செய்து உள்ள சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகளை எப்பொழுதும் பணிவோமாக.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

உ
॥ श्रीः ॥
॥ ஸ்ரீ: ॥

# ॥ अद्वैतानुभूतिः ॥

# ॥ அத்³வைதானுபூ⁴தி: ॥

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[**அத்³வைதானுபூ⁴தி:** 84 சுலோகங்கள் கொண்ட சிறிய பிரகரணம். குருமுக மாக வேதாந்த சிரவணம் செய்தவனுக்கு மனதில் தோன்றும் ஸந்தேஹங்கள் எல்லாம் நீங்கி அத்வைதானுபவம் ஏற்பட ஏராளமான யுக்திகள் இதில் காட்டப் பட்டிருக்கின்றன. ஒரு பொருள் வேறொரு பொருளாகவும், பலவாகவும் தோனறுவத ற்கு திருஷ்டாந்தங்களைக் காட்டி ஒரே ஆத்மா பல பிரிவுகளுள்ள பிரபஞ்சமாகத் தோன்றுகிறது என்பதைத் தீர்மானிக்கிறார். எங்கும் பரவியுள்ள ஆத்மா தான் ஸச்சி தானந்த வஸ்து. அக்ஞானத்தால் பிரபஞ்சத்தை அவ்வாறு நினைக்கிறோம் ஆத்ம தாமங்கள் பிரபஞ்சத்தில் தோன்றுகிறதே தவிற பிரபஞ்சத்திற்குள் அதிலும் தேஹா திகளுக்குள் ஆத்மா இருந்தாலும் அவைகளின் தாமங்கள் ஆத்மாவுககுக் கிடையாது. ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களிலிருந்து ஆத்மா வேறுபட்டவன். ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற அவஸ்தைகள் சரீரத்திற்கே தவிற ஆத்மாவுக்குக கிடையாது இவ்வாறு ஆத்மானாத்ம விவேசனம செய்து இந்த ஆத்மாவே ப்ரஹ்மம் என்று அத்வைதத்தை நிரூபணம் செய்கிறார்.]

**अहमानन्दसत्यादिलक्षणः केवलः शिवः ।**
**सदानन्दादिरूपं यत्तेनाहमचलोऽद्वयः ॥ १ ॥**

**அஹமானந்த³ஸத்யாதி³லக்ஷண: கேவல: ஶிவ: ।**
**ஸதா³னந்தா³தி³ரூபம் யத்தேனாஹமசலோ(அ)த்³வய: ॥ 1 ॥**

**अहम्** **அஹம்** = நான்,

**आनन्दसत्यादिलक्षणः** **ஆனந்த³ஸத்யாதி³லக்ஷண:** = ஆனந்தம், ஸத்யம் முதலியவைகளை லக்ஷணமாகக் கொண்டவனும்,

**केवलः** **கேவல:** = ஒருவித தர்மமுமற்றவனும்,

**शिवः** **ஶிவ:** = ஸாக்ஷியுமானவன்,

**यत्** **யத்** = யாதொரு ப்ரம்மம்,

| | | |
|---|---|---|
| **सदानन्दादिरूपं**<br>**ஸதா³னந்தா³தி³ரூபம்** | = | ஸத், ஆனந்தம் முதலான ரூபமுடையதோ, |
| **तत्**<br>**தத்** | = | (அதே நான்), |
| **तेन:**<br>**தேன:** | = | அதனுல், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **अचल:**<br>**அசல:** | = | சலனமற்றவனுயும், |
| **अद्वय:**<br>**அத்³வய:** | = | இரண்டற்றவனுகவுமிருக்கிறேன். |

நான் ஸத்யமாயும் ஞானமாயும், ஆனந்தமாயும் யாதொரு தர்மமும் அற்றவனுயும் ஸாக்ஷியாயுமிருப்பவன். எந்த ப்ரஹ்மம் ஸத், ஞான, ஆனந்த வடிவாக உளதோ, அதுவே நான் இருவருக்கும் லக்ஷணத்தில் வேறுபாடு இல்லாததால் வ்யாபகமானதும் இரண்டற்றதுமான ப்ரம்ம வஸ்துவே நான். ஆத்மா ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, ஸமாதி, மூர்ச்சை என்ற எல்லா நிலைகளிலும் இருக்கிறேன் என்று அறிவதால் ஸத்ரூபமானது. எல்லா நிலைகளிலும் மற்றெரு பிரகாசத்தை அபேக்ஷிக்காமல் தானே விளங்குவதால் சித்ரூபமானது. எல்லையற்ற ப்ரீதிக்கு விஷயமாய் இருப்பதால் ஆனந்தரூபமானது என்று தெரியவருகின்றது. இவ்வாறே வேதாந்தங்களில் **सत्यं ज्ञानमनन्तम् (ஸத்யம் ஞானமனந்தம்) विज्ञानमानन्दं ब्रह्म (விஜ்ஞானமானந்த³ம் ப்³ரஹ்ம)** என்று ப்ரஹ்மலக்ஷணம் சொல்லப்படுகிறது எந்த வஸ்துக்களுக்கு லக்ஷணத்தில வேற்றுமை இல்லையோ அது ஒன்றே என்ற முறைப்படி நானே ப்ரம்மம். எந்த வஸ்துவின் ஸம்பந்தத்தால் எந்த வஸ்து தோன்றுகின்றதோ அது அதில் தோன்றுவதாகும். எவ்வாறெனில கயிற்றில இது ஸர்ப்பம், இது தண்டம் என்று தோன்றுகிறது. ஒவ்வொன்றிலும் இது, இது என்று ஸம்பந்தம் தோன்றுவதால் அந்தக் கயிற்றில ஸர்ப்பம் முதலியவை தோற்றமாகும். மேலும் தங்கத்தில் செய்த ஆபரணங்கள் ஒவ்வொன்றிலும், தங்கக்காப்பு, தங்கக்குண்டலம், என்று தங்கம் தங்கம் என்று ஸம்பந்தம் தோன்றுவதால் தங்கத்தை தவிர ஆபரணங்கள் வேறல்ல. அவ்வாறே **सद्धीदं सर्वे सत्सत् (ஸத்³தீ⁴த³ம் ஸர்வே ஸத்ஸத்) चिद्धीदं सर्व काशते काशते इति (சித்³தீ⁴த³ம் ஸர்வ காஶதே காஶதே இதி)** என்ற வாக்யப்படி கடம் இருக்கின்றது, படம் இருக்கின்றது என்று தோன்றுவதினுல் ஸத்வஸ்துவில் ஸகல ஜகத்தும் தோன்றுகின்றது. அந்த ஸத்வஸ்து ஒன்றே உண்மையாகும் **सदेव सत्यम् (ஸதே³வ ஸத்யம்)** என்று சொல்லப்பட்டிருக்கின்றது ஜகத் தோற்றம் என்று சொல்வதுபோல் ஜீவன் ஈச்வரன் என்ற பேதமும் மாயை அந்தக்கரணம் என்ற உபாதி பேதத்தினுல் கல்பிதமே. ஆகையால் ஜீவன் ஈச்வரன் ஜகத் இவைகளுக்குள் பேதம் கிடையாது. மாயையினுலேயே தோன்றுகின்றது. அதுவும் கல்பிதமாகை

யால் அத்வைதம் ஸித்தம் என்று முதல் சுலோகத்தினுல் எல்லா வேதாந்தப் பொருள்களையும் பகவத்பாதாள் அநுபவமூலம் விளக்குகிறுர்கள். **(1)**

(**அவதாரிகை**) பேதம் தோன்றுவதின் காரணமாவது: -

**अक्षिदोषाद्यथैकोऽपि द्वयवद्भाति चन्द्रमाः ।**
**एकोऽप्यात्मा तथा भाति द्वयवन्मायया मृषा ॥ २ ॥**

**அக்ஷிதோ³ஷாத்³யதை²கோ(அ)பி த்³வயவத்³பா⁴தி சந்த்³ரமா: ।**
**ஏகோ(அ)ப்யாத்மா ததா² பா⁴தி த்³வயவன்மாயயா ம்ருஷா ॥ 2 ॥**

| | | |
|---|---|---|
| **चन्द्रमाः** சந்த்³ரமா: | = | சந்திரன், |
| **एकोऽपि** ஏகோ(அ)பி | = | ஒன்ருக இருந்தபோதிலும், |
| **अक्षिदोषात्** அக்ஷிதோ³ஷாத் | = | கண்ணில் உள்ள காசம் முதலான தோஷத்தினுல், |
| **यथा** யதா² | = | எவ்விதம், |
| **द्वयवत्** த்³வயவத் | = | இரண்டு போல, |
| **भाति** பா⁴தி | = | தோன்றுகின்றதோ, |
| **तथा** ததா² | = | அவ்விதமே, |
| **आत्मा** ஆத்மா | = | ஆத்மாவானது, |
| **एकोऽपि** ஏகோ(அ)பி | = | ஒன்ருக இருப்பினும், |
| **मायया** மாயயா | = | அக்ஞானத்தினுல், |
| **मृषा** ம்ருஷா | = | பொய்யாக, |
| **द्वयवत्** த்³வயவத் | = | இரண்டாக இருப்பதுபோல் (அநேகமாக), |
| **भाति** பா⁴தி | = | தோன்றுகின்றது. |

ஒருவனுகிய சந்திரன் கண்களின் கோளாறினுல் இருவனுகத் தோன்றுவது போல், ஒன்ருகிய ஆத்மா, மாயையினுல் பொய்யாக இரண்டாகத் தோன்றுகின்றது. இதற்குச் சான்ருக **मायामात्रमिदं द्वैतमद्वैतं परमार्थतः (மாயா மாத்ரமிதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்தத:)** என்ற வாக்யங்களும் உள்ளன. **(2)**

**(அவதாரிகை)** பேதம் நீங்குவதற்குக் காரணம் உதாரணமூலம் விளக்கப்படு கின்றது: -

## अक्षिदोषविहीनानामेक एव यथा शशी ।
## मायादोषविहीनानामात्मैवैकस्तथा सदा ॥ ३ ॥

**அக்ஷிதோ³ஷவிஹீனுநாமேக ஏவ யதா² ஶஶீ ।**
**மாயாதோ³ஷவிஹீனுநாமாத்மைவைகஸ்ததா² ஸதா³ ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **शशी** ஶஶீ | = | சந்திரன், |
| **अक्षिदोषविहीनानां** அக்ஷிதோ³ஷவிஹீனுனும் | = | கண்ணில் குற்றமில்லாதவர்களுக்கு, |
| **यथा** யதா² | = | எவ்விதம், |
| **एक एव** ஏக ஏவ | = | ஒன்றுதானுே, |
| **तथा** ததா² | = | அவ்விதமே, |
| **मायादोषविहीनानां** மாயாதோ³ஷவிஹீனுனும் | = | அக்ஞானமாகிற குற்றம் இல்லாதவர்களுக்கு, |
| **सदा** ஸதா³ | = | எப்பொழுதும், |
| **आत्मा** ஆத்மா | = | ஆத்மா, |
| **एक एव** ஏக ஏவ | = | ஒன்றுதான், |

தோஷமற்ற கண்கள் உள்ளவர்களுக்குச் சந்திரன் ஒருவனுகவே எப்பொழுதும் தோன்றுவதுபோல் மாயையாகிய தோஷம் அற்றவர்களுக்கு எப்பொழுதும் ஆத்மா ஒன்றே அதாவது கண்களில் ரோகம் ஏற்படுவதற்கு முன்பும், ரோகம் உண்டான சமயத்திலும் (சந்திரன் இரண்டு என்று தோன்றும் சமயம்) ரோகம் நீங்கிய காலத் திலும் சந்திரன் ஒருவனே. அவ்வாறே, த்வைதம் தோன்றும் காலத்திலும் (அக்ஞான காலம்) ஞானத்தினுல் அறியாமை நீங்கிய பிறகும் ஆத்மா ஒன்றே. ஆனுல் நேத்ர

ரோகம் என்ற தோஷம் நடுவில் ஏற்படுவது. மாயா தோஷமோ அனாதியாக ஏற்பட்டது. ஆகையால் மாயைக்கு முன் என்று கூறமுடியாது. **(3)**

(அ) முன் கூறியதையே விளக்குகிறார் : -

**द्वित्वं भात्यक्षिदोषेण चन्द्रे स्वे मायया जगत् ।**
**द्वित्वं मृषा यथा चन्द्रे मृषा द्वैतं तथात्मनि ॥ ४ ॥**

**த்³வித்வம் பா⁴த்யக்ஷிதோ³ஷேண சந்த்³ரே ஸ்வே மாயயா ஜக³த் ।**
**த்³வித்வம் ம்ருஷாயதா² சந்த்³ரே ம்ருஷா த்³வைதம் ததா²த்மனி ॥ 4 ॥**

**यथा** = எவ்விதம்,
**யதா²**
**चन्द्रे** = சந்திரனிடத்தில்,
**சந்த்³ரே**
**अक्षिदोषेण** = கண்ணின் நோயால்,
**அக்ஷிதோ³ஷேண**
**द्वित्वं** = இரண்டு என்ற தன்மை,
**த்³வித்வம்**
**भाति** = தோன்றுகின்றதோ,
**பா⁴தி**
**तथा** = அவ்வாறு,
**ததா²**
**स्वे** = தன் ஸ்வரூபமான ஆத்மாவில்,
**ஸ்வே**
**जगत्** = உலகம்,
**ஜக³த்**
**मायया** = மாயையினால்,
**மாயயா**
**भाति** = தோன்றுகின்றது.
**பா⁴தி**
**यथा** = எவ்வாறு,
**யதா²**
**चन्द्रे** = சந்திரனிடத்தில்,
**சந்த்³ரே**
**द्वित्वं** = இரண்டு என்பது,
**த்³வித்வம்**

**मृषा** = பொய்யோ,
**ம்ருஷா**

**तथा** = அவ்வாறே,
**ததா²**

**आत्मनि** = ஆத்மாவில்,
**ஆத்மனி**

**द्वैतं** = இரண்டு என்பது,
**த்³வைதம்**

**मृषा** = பொய்.
**ம்ருஷா**

கண் ரோகத்தினுல் சந்திரனிடத்தில் பேதம் தோன்றுவது (இரண்டாகத் தோன்றுவது) போல் தன் ஆத்ம ஸ்வரூபத்தில் மாயையினால் உலகம் தோன்றுகின்றது. சந்திரனிடத்தில் பேதம் பொய்யானதுபோல் ஆத்மாவிலும் ஜகத் பேதம் பொய்யானது. **(4)**

(**அவதாரிகை**) ஆத்மா எங்கும் நிறைந்தது: -

**आत्मनः कार्यमाकाशो विनात्मानं न संभवेत् ।**
**कार्यस्य पूर्णता सिद्धा किं पुनः पूर्णतात्मनः ॥ ५ ॥**

**ஆத்மனஃ கார்யமாகாஶோ வினுத்மானம் ந ஸம்ப⁴வேத் ।**
**கார்யஸ்ய பூர்ணதா ஸித்³தா⁴ கிம் புனஃ பூர்ணதாத்மனஃ ॥ 5 ॥**

**आत्मनः** = ஆத்மாவினிடமிருந்து,
**ஆத்மனஃ**

**कार्य** = உண்டான,
**கார்ய**

**आकाशः** = ஆகாயமானது,
**ஆகாஶஃ**

**आत्मनः विना** = ஆத்மாவை விட்டு,
**ஆத்மனஃ வினு**

**न संभवेत्** = இருக்காது,
**ந ஸம்ப⁴வேத்**

**कार्यस्य** = கார்யமான ஆகாயத்திற்கு,
**கார்யஸ்ய**

**पूर्णता** = வியாபகத்தன்மை (எங்கும் பரவி இருத்தல்),
**பூர்ணதா**

सिद्धा = பிரசித்தமானது,

ஸித்³தா⁴

आत्मनः = (காரணமான) ஆத்மாவிற்கு,

ஆத்மன:

पूर्णता = வியாபகத்தன்மை,

பூர்ணதா

किं पुनः = கூறவும் வேண்டுமா?

கிம் புன:

**आत्मन आकाशः संभूतः (ஆத்மன ஆகாஶ: ஸம்பூ⁴த:)**

என்ற ச்ருதியின்படி ஆத்மாவிலிருந்து உண்டான கார்யமான ஆகாயம் காரணமான ஆத்மாவை விட்டு விலகி இருக்கமுடியாது. ஆகாயம் எங்கும் பரவியுள்ளது என்பது பிரஸித்தமாகும். அதற்குக் காரணமான ஆத்மா எங்கும் பரவியுள்ளது என்பதைக் கூறவும் வேண்டுமா! **(5)**

**(அவதாரிகை)** ஆத்மா ஒன்று: -

**कार्यभूतो यथाकाश एक एव न हि द्विधा ।**
**हेतुभूतस्तथात्मायमेक एव विजानतः ॥ ६ ॥**

**கார்யபூ⁴தோ யதா²காஶ ஏக ஏவ ந ஹி த்³விதா⁴ ।**
**ஹேதுபூ⁴தஸ்ததா²த்மாயமேக ஏவ விஜானத: ॥ 6 ॥**

यथा = எவ்வாறு,

யதா²

कार्यभूतः = காரியமாக ஆன,

கார்யபூ⁴த:

आकाशः = ஆகாயமானது,

ஆகாஶ:

एक एव = ஒன்றுதானே,

ஏக ஏவ

द्विधा = இரண்டாக,

த்³விதா⁴

नहि = இல்லையோ,

நஹி

तथा = அவ்வாறே,

ததா²

| | | |
|---|---|---|
| हेतुभूतः<br>ஹேதுபூ⁴த: | = | காரணமான, |
| अयम् आत्मा<br>அயம் ஆத்மா | = | இந்த ஆத்மாவானது, |
| विजानतः<br>விஜானத: | = | அறிவாளிக்கு, |
| एक एव<br>ஏக ஏவ | = | ஒன்றுதான். |

ஆத்மாவின் காரியமான (ஆத்மாவிலிருந்து உண்டான) ஆகாயம் ஒன்றே; இரண்டல்ல. அவ்வாறே காரணமான ஆத்மாவும் அறிவாளிக்கு ஒன்றே. **(6)**

**(அவதாரிகை)** ஆத்மா இரண்டாகத் தோன்றக் காரணம்: -

**एकोऽपि द्वयवद्भाति यथाकाश उपाधितः ।**
**एकोऽपि द्वयवत्पूर्णस्तथात्मायनुपाधितः ॥ ७ ॥**

**ஏகோ(அ)பி த்³வயவத்³பா⁴தி யதா²காஶ உபாதி⁴த: ।**
**ஏகோ(அ)பி த்³வயவத்பூர்ணஸ்ததா²த்மாயனுபாதி⁴த: ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| यथा<br>யதா² | = | எவ்வாறு, |
| आकाशः<br>ஆகாஶ: | = | ஆகாயம், |
| एकोऽपि<br>ஏகோ(அ)பி | = | ஒன்றாக இருப்பினும், |
| उपाधितः<br>உபாதி⁴த: | = | (குடம், மடம் முதலான) உபாதிகளால், |
| द्वयवत्<br>த்³வயவத் | = | இரண்டுபோல், |
| भाति<br>பா⁴தி | = | தோன்றுகின்றதோ, |
| तथा<br>ததா² | = | அவ்வாறே, |
| पूर्णः<br>பூர்ண: | = | வியாபகமான (எங்கும் நிறைந்த), |
| अयम्<br>அயம் | = | இந்த, |

| | | |
|---|---|---|
| **आत्मा** **ஆத்மா** | = | ஆத்மா, |
| **एकोऽपि** **ஏகோ(அ)பி** | = | ஒன்ருயினும், |
| **उपाधित:** **உபாதி⁴த:** | = | உபாதி ஸம்பந்தத்தால், |
| **द्वयवत्** **த்³வயவத்** | = | இரண்டுபோல், |
| **भाति** **பா⁴தி** | = | பிரகாசிக்கின்றது. |

ஒன்ருகிய ஆகாயம் குடம், மடம் என்ற உபாதிகளால் வெவ்வேருகத் தோன்றுவதுபோல எங்கும் நிறைந்த ஒன்ருகிய ஆத்மாவும் சரீராதி உபாதிகளால் வெவ்வேருகத் தோன்றுகிறது. உபாதியாவது - பொருளில் ஸம்பந்தப்படாமல் அதை அளவிடுவதற்குச் சாதனமானது. **(7)**

**(அவதாரிகை)** ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்பது: -

**कारणोपाधिचैतन्यं कार्यसंस्थाच्चितोऽधिकम् ।**
**न घटा भ्रान्मृदाकाशः कुत्रचिन्नाधिको भवेत् ॥ ८ ॥**

**காரணோபாதி⁴சைதன்யம் கார்யஸம்ஸ்தா²ச்சிதோ(அ)தி⁴கம் ।**
**ந க⁴டா ப்⁴ரான்ம்ருதா³காஶ: குத்ரசின்ஞதி⁴கோ ப⁴வேத் ॥ 8 ॥**

**निर्गतोपाधिराकाश एक एव यथा भवेत् ।**
**एक एव तथात्मायं निर्गतोपाधिक: सदा ॥ ९ ॥**

**நிர்க³தோபாதி⁴ராகாஶ ஏக ஏவ யதா² ப⁴வேத் ।**
**ஏக ஏவ ததா²த்மாயம் நிர்க³தோபாதி⁴க: ஸதா³ ॥ 9 ॥**

| | | |
|---|---|---|
| **कारणोपाधिचैतन्यं** **காரணோபாதி⁴சைதன்யம்** | = | காரணோபாதி சைதன்யம் (மாயையுடன் கூடிய ஞானம்) |
| **कार्यसंस्थात्** **கார்யஸம்ஸ்தா²த்** | = | அந்தக்கரணத்தை அடைந்த, |
| **चित:** **சித:** | = | சைதன்யத்தைக் காட்டிலும், |
| **अधिकं** **அதி⁴கம்** | = | வேருக, |
| **न भवेत्** **ந ப⁴வேத்** | = | ஆகாது, |

| | | |
|---|---|---|
| घटाभ्रात्<br>க⁴டாப்⁴ராத் | = | கடாகாசத்தைக் காட்டிலும், |
| मृदाकाश:<br>ம்ருதா³காஶ: | = | மண்ணைச்சேர்ந்த ஆகாசம், |
| कुत्रचित्<br>குத்ரசித் | = | ஒருக்காலும், |
| अधिक:<br>அதி⁴க: | = | வேறாக, |
| न भवेत्<br>ந ப⁴வேத் | = | ஆகாது. |

| | | |
|---|---|---|
| यथा<br>யதா² | = | எவ்வாறு, |
| आकाश:<br>ஆகாஶ: | = | ஆகாயமானது, |
| निर्गतोपाधि:<br>நிர்க³தோபாதி⁴: | = | உபாதி ஸம்பந்தம் இல்லாத நிலைமையில், |
| एक एव<br>ஏக ஏவ | = | ஒன்றாகவே, |
| भवेत्<br>ப⁴வேத் | = | ஆகுமோ, |
| तथा<br>ததா² | = | அவ்வாறு, |
| अयम् आत्मा<br>அயம் ஆத்மா | = | இந்த ஆத்மா, |
| निर्गतोपाधिक:<br>நிர்க³தோபாதி⁴க: | = | உபாதி ஸம்பந்தம் அற்றநிலையில், |
| सदा<br>ஸதா³ | = | எப்பொழுதும், |
| एक एव<br>ஏக ஏவ | = | ஒன்று தான். |

ஜகத் காரணமான மாயையாகிய உபாதியில் ப்ரதிபிம்பத்தை அடைந்த சைதன்யம் (ஞானம்) பரமாத்மா. மாயையின் காரியமான அந்தக்கரணமாகிய உபாதியில் பிரதிபிம்பத்தை அடைந்த சைதன்யம் ஜீவாத்மா

**कार्योपाधिरयं जीव: कारणोपाधिरीश्वर:**

**கார்யோபாதி⁴ரயம் ஜீவ: காரணோபாதி⁴ரீஶ்வர:**

என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகையால் எவ்விதம் கடஸம்பந்தமான ஆகாயத்தைக்காட்டிலும் மண் ஸம்பந்தமான ஆகாசம் ஒரு காலத்திலும் வேறில்லை யோ அவ்வாறே ஜீவனைக்காட்டிலும் பரமாத்மா வேறில்லை.

எவ்வாறு ஆகாயத்திற்கு உபாதிகளான (வேற்றுமைக்குக் காரணமான) குடம், மண் இவைகளை மறந்தால் ஆகாயம் என்ற முறையில் ஒன்றுகவே இருக்கிறதோ அவ்வாறே சைதன்யத்திற்கு உபாதிகளான மாயையையும், அந்தக்கரணத்தையும் விட்டால் (மறந்தால்) சைதன்யம் என்பது முக்காலத்திலும் ஒன்றுதான. **(8-9)**

## आकाशादन्य आकाशः आकाशस्य यथा नहि ।
## एकत्वादात्मनो नान्य आत्मा सिद्ध्यति चात्मनः ॥ १० ॥

**ஆகாஶாத³ன்ய ஆகாஶ: ஆகாஶஸ்ய யதா² நஹி ।**
**ஏகத்வாதா³த்மனோ நான்ய ஆத்மா ஸித்³த்⁴யதி சாத்மன: ॥ 10 ॥**

**यथा** = எவ்வாறு,
**யதா²**

**आकाशस्य** = ஆகாயம்,
**ஆகாஶஸ்ய**

**एकत्वात्** = ஒன்றுயிருப்பதால்,
**ஏகத்வாத்**

**आकाशात्** = ஆகாசத்தைக் காட்டிலும்,
**ஆகாஶாத்**

**अन्य** = மற்றொரு,
**அன்ய**

**आकाशः** = ஆகாயம்,
**ஆகாஶ:**

**नहि** = இல்லையோ,
**நஹி**

**तथा** = அவ்வாறு,
**ததா²**

**आत्मनः** = ஆத்மாவானது,
**ஆத்மன:**

**एकत्वात्** = ஒன்றுக இருப்பதால்,
**ஏகத்வாத்**

**आत्मनश्च** = ஆத்மாவைக்காட்டிலும்,
**ஆத்மனஶ்ச**

**अन्यः** = மற்றொரு,
**அன்ய:**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**न सिद्ध्यति** = ஸித்திக்காது.

**ந ஸித்³த⁴யதி**

உபாதியற்ற ஸ்வபாவமான ஆகாயத்தைக்காட்டிலும் மற்ெரு ஆகாசம் இல்லாததுபோன்று உபாதியற்ற ஆத்மாவும் ஒன்றே.

**आत्मा सर्वगतश्च नित्यः । सर्वभूतेषु चात्मानम्**

**(ஆத்மா ஸர்வக³தஶ்ச நித்ய: । ஸர்வபூ⁴தேஷு சாத்மானம்)**

முதலிய வாக்கியங்கள் ஆத்மா ஒன்று என்பதற்கு ஆதாரங்களாகும். **(10)**

(**அவதாரிகை**) ஜீவாத்ம பரமாத்ம பேதம் இல்லாவிடினும் பிரபஞ்ச பேதமிருப் பதால் அத்வைதம் எவ்வாறு ஸித்திக்கும் எனில்: -

**मेघयोगाद्यथा नीरं करकाकारतामियात् ।**
**मायायोगात्तथैवात्मा प्रपञ्चाकारतामियात् ॥ ११ ॥**

**மேக⁴யோகா³த்³யதா² நீரம் கரகாகாரதாமியாத் ।**
**மாயாயோகா³த்ததை²வாத்மா ப்ரபஞ்சாகாரதாமியாத் ॥ 11 ॥**

**यथा** = எவ்விதம்,

**யதா²**

**नीरं** = ஜலமானது,

**நீரம்**

**मेघयोगात्** = மேகத்தின் சேர்க்கையினுல்,

**மேக⁴யோகா³த்**

**करकाकारतां** = ஆலங்கட்டி உருவத்தை,

**கரகாகாரதாம்**

**इयात्** = அடையுமோ,

**இயாத்**

**तथैव** = அவ்விதமே,

**ததை²வ**

**आत्मा** = ஆத்மாவானது,

**ஆத்மா**

**मायायोगात्** = மாயையின் ஸம்பந்தத்தினுல்,

**மாயாயோகா³த்**

| | | |
|---|---|---|
| प्रपञ्चाकारतां<br>ப்ரபஞ்சாகாரதாம் | = | உலகமாயிருக்கும் தன்மையை, |
| इयात्<br>இயாத் | = | அடைகின்றது. |

மேகத்தின் சேர்க்கையினுல் தண்ணீர் பனிக்கட்டியாவதுபோல் மாயையின் சேர்க்கையினுல் ஆத்மாவும் உலகமாக ஆகின்றது. (11)

**वर्षोपल इवाभाति नीरमेवाभ्रयोगतः ।**
**वर्षोपलविनाशेन नीरनाशो यथा न हि ॥ १२ ॥**

**வர்ஷோபல இவாபா⁴தி நீரமேவாப்⁴ரயோக³த: ।**
**வர்ஷோபலவிநாஶேன நீரநாஶோ யதா² ந ஹி ॥ 12 ॥**

**आत्मैवायं तथा भाति मायायोगात्प्रपञ्चवत् ।**
**प्रपञ्चस्य विनाशेन स्वात्मनाशो नहि क्वचित् ॥ १३ ॥**

**ஆத்மைவாயம் ததா² பா⁴தி மாயாயோகா³த்ப்ரபஞ்சவத் ।**
**ப்ரபஞ்சஸ்ய விநாஶேன ஸ்வாத்மநாஶோ நஹி க்வசித் ॥ 13 ॥**

| | | |
|---|---|---|
| यथा<br>யதா² | = | எவ்விதம், |
| नीरमेव<br>நீரமேவ | = | ஜலமே, |
| अभ्रयोगतः<br>அப்⁴ரயோக³த: | = | மேகத்தின் சேர்க்கையினுல், |
| वर्षोपल इव<br>வர்ஷோபல இவ | = | ஆலங்கட்டிபோன்று, |
| आभाति<br>ஆபா⁴தி | = | தோன்றுகின்றதோ, |
| वर्षोपलविनाशेन<br>வர்ஷோபலவிநாஶேன | = | ஆலங்கட்டியின் அழிவினுல், |
| नीरनाशः<br>நீரநாஶ: | = | ஜலத்திற்கு அழிவு, |
| न हि<br>ந ஹி | = | இல்லையோ, |
| तथा<br>ததா² | = | அவ்விதமே, |

| | | |
|---|---|---|
| **अयम् आत्मैव** <br> **அயம் ஆத்மைவ** | = | இந்த ஆத்மாவே, |
| **मायायोगात्** <br> **மாயாயோகா³த்** | = | மாயையின் ஸம்பந்தத்தினுல், |
| **प्रपञ्चवत्** <br> **ப்ரபஞ்சவத்** | = | உலகம் போன்று, |
| **भाति** <br> **பா⁴தி** | = | தோன்றுகின்றது, |
| **प्रपञ्चस्य** <br> **ப்ரபஞ்சஸ்ய** | = | அத்தகைய உலகத்தின், |
| **विनाशेन** <br> **விநாஶேன** | = | அழிவினுல், |
| **स्वात्मनाशः** <br> **ஸ்வாத்மநாஶ꞉** | = | தன் ஆத்மாவிற்கு அழிவானது, |
| **क्वचित्** <br> **க்வசித்** | = | ஒருபொழுதும், |
| **नहि** <br> **நஹி** | = | உண்டாகாது. |

மேகத்தின் சேர்க்கையினுல் தண்ணீரே ஆலங்கட்டியாகத் தோன்றுவதுடன், அக்கட்டி அழிந்த சமயத்திலும் நீர் அழியாமலே இருப்பதுபோல, மாயையின் சோக்கையினுல் ஆத்மாவே உலகமாகத் தோன்றிடினும், அவ்வுலகம் அழிந்த பொழுதும் ஆத்மா அழியாமலிருக்கின்றது. பஞ்சதசியில்

**तमःप्रधानप्रकृतेः तद्भोगायेश्वरेच्छया ।**
**वियत्पवनतेजोम्बुभुचो भूतानि जज्ञिरे**

**தம꞉ப்ரதா⁴னப்ரக்ருதே꞉ தத்³போ⁴கா³யேஶ்வரேச்ச²யா ।**
**வியத்பவனதேஜோம்பு³பு⁴சோ பூ⁴தானி ஜஜ்ஞிரே**

**मायामात्रमिदं सर्व**

**மாயாமாத்ரமித³ம் ஸர்வ**

என்ற வாக்யங்களும், உலகம் மாயை என்பதற்குச் சான்ருகும். அதிஷ்டானமான கயிற்றில் தோன்றிய பாம்பு மறைந்தாலும் கயிறு மறையாமலே இருப்பதுபோல, அதிஷ்டானமான ஆத்மாவில மாயையினுல் தோன்றிய ஜகத் அழிந்தாலும் ஆத்மா அழியாமலே இருக்கும். **(12-13)**

**जलादन्य इवाभाति जलोत्थो बुदबुदो यथा ।**
**तथात्मनः पृथगिव प्रपञ्चोऽयमनेकधा ॥ १४ ॥**

**ஜலாத3ன்ய இவாபா4தி ஜலோத்தோ2 பு3த3பு3தோ3 யதா2 ।**
**ததா2த்மன: ப்ருத2கி3வ ப்ரபஞ்சோ(அ)யமனேகதா4 ॥ 14 ॥**

**यथा बुदबुदनाशेन जलनाशो न कर्हिचित् ।**
**तथा प्रपञ्चनाशेन नाशः स्यादात्मनो नहि ॥ १५ ॥**

**யதா2 பு3த3பு3த3நாஶேன ஜலநாஶோ ந கர்ஹிசித் ।**
**ததா2 ப்ரபஞ்சநாஶேன நாஶ: ஸ்யாதா3த்மனோ நஹி ॥ 15 ॥**

**यथा** = எவ்விதம்,
**யதா2**

**जलोत्थः** = ஜலத்திலிருந்து உண்டான,
**ஜலோத்த2:**

**बुदबुदः** = குமிழியானது,
**பு3த3பு3த3:**

**जलात्** = ஜலத்தைக்காட்டிலும்,
**ஜலாத்**

**अन्यइव** = வேறுக உள்ளது போல்,
**அன்யஇவ**

**आभाति** = தோன்றுகின்றதோ,
**ஆபா4தி**

**तथा** = அவ்விதமே,
**ததா2**

**अनेकधा** = பலவாறுக உள்ள,
**அனேகதா4**

**अयं** = இந்த,
**அயம்**

**प्रपञ्चः** = உலகமானது,
**ப்ரபஞ்ச:**

**आत्मनः** = ஆத்மாவைக்காட்டிலும்,
**ஆத்மன:**

**पृथगिव** = வேறுனது போன்று,
**ப்ருத2கி3வ**

**आभाति** = தோன்றுகின்றது.
**ஆபா4தி**

| | | |
|---|---|---|
| **यथा** | = | எவ்வாறு, |
| **யதா²** | | |
| **बुदबुदनाशेन** | = | குமிழியின் நாசத்திஞல், |
| **பு³த³பு³த³நாஶேன** | | |
| **कर्हिचित्** | = | ஒருபொழுதும், |
| **கர்ஹிசித்** | | |
| **जलनाशः** | = | ஜலத்திற்கு நாசம், |
| **ஜலநாஶ:** | | |
| **न** | = | இல்லையோ, |
| **ந** | | |
| **तथा** | = | அவ்விதமே, |
| **ததா²** | | |
| **प्रपञ्चनाशेन** | = | உலகத்தின் அழிவிஞல், |
| **ப்ரபஞ்சநாஶேன** | | |
| **आत्मनः** | = | ஆத்மாவிற்கு, |
| **ஆத்மன:** | | |
| **नाशः** | = | நாசமானது, |
| **நாஶ:** | | |
| **नहि स्यात्** | = | கிடையாது. |
| **நஹி ஸ்யாத்** | | |

தண்ணீரில் உண்டாகும் குமிழ் தண்ணீரைக் காட்டிலும் வேருகத் தோன்றுவது போல், ஆத்மாவில் உண்டாகிய ப்ரபஞ்சம் அதைக்காட்டிலும் வேருகத் தோன்றுகின் றது. குமிழ் அழிவதிஞல் ஒருக்காலும் தண்ணீருக்கு அழிவு ஏற்படாததுபோல் உலகம் அழிந்தாலும் ஆத்மாவுக்கு அழிவு கிடையாது.

பால் தயிராக மாறினபின் தயிர் நாசமடைந்தால் பாலுக்கும் நாசம் ஏற்படுகின் றது. அவ்வாறு உலகமாக மாறிய ஆத்மாவிற்கு உலக நாசத்திஞல் நாசம் ஏற்படுமோ எனில் இல்லை. ஏனெனில ஆத்மா உலகமாக பரிணமத்தை (மாறுதல்) அடைவதில்லை. மண்ணிலிருந்து உண்டாகிறது குடம். அது உண்டாவதற்கு முன்பும், குடமாக இருக்கும்பொழுதும், அது அழிந்தகாலத்திலும் மண்ணிற்கு அழிவு இல்லை. ஆஞல் குடம் என்ற பெயர், அகன்ற உடல் இந்த நாமரூபங்கள் மாத்திரம் குடம் மறைவதிஞல் மறைந்து விடுகின்றன. அவ்வாறே கயிற்றில் தோன்றிய ஸர்பநாசத் திஞல் கயிற்றிற்கு நாசம் ஏற்படுவதில்லை. இதுபோல ஆத்மாவிற்கு நாசம் கிடையாது.

**वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् ।**

**வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் ।**

**अधिष्ठानावशेषो हि नाशः कल्पितवस्तुनः ।**

**அதி4ஷ்டா2னவஶேஷோ ஹி நாஶ: கல்பிதவஸ்துன: ।**

என்ற வாக்யங்கள் இவ்விஷயத்தில் பிரமாணங்களாகும். **(14-15)**

(**அவதாரிகை**) ஸ்தூல ஸூக்ஷ்ம காரணசரீரங்களின் தர்மங்கள் ஆத்மாவைச் சார்ந்தவை அன்று. எவ்வாறெனில்: -

**अहिनिर्व्वयनीजातः शुच्यादिर्नाहिमाप्नुयात् ।**
**तथा स्थूलादिसंभूतः शुच्यादिर्नाप्नुयादिमम् ॥ १६ ॥**

**அஹிநிர்வ்வயனீஜாத: ஶுச்யாதி3ர்னாஹிமாப்னுயாத் ।**
**ததா2 ஸ்தூ2லாதி3ஸம்பூ4த: ஶுச்யாதி3ர்னாப்னுயாதி3மம் ॥ 16 ॥**

| | | |
|---|---|---|
| **अहिनिर्व्वयनीजातः**<br>**அஹிநிர்வ்வயனீஜாத:** | = | பாம்புச்சட்டையில் உண்டான, |
| **शुच्यादिः**<br>**ஶுச்யாதி3:** | = | தூய்மையோ, அக்னியோ முதலியவை, |
| **अहिम्**<br>**அஹிம்** | = | பாம்பை, |
| **न आप्नुयात्**<br>**ந ஆப்னுயாத்** | = | அடையாதோ, |
| **तथा**<br>**ததா2** | = | அவ்விதமே, |
| **स्थूलादिसंभूतः**<br>**ஸ்தூ2லாதி3ஸம்பூ4த:** | = | ஸ்தூலம் முதலிய சரீரங்களில் உண்டான, |
| **शुच्यादिः**<br>**ஶுச்யாதி3:** | = | சுத்தம் முதலியவை, |
| **इमं**<br>**இமம்** | = | இந்த ஆத்மாவை, |
| **न आप्नुयात्**<br>**ந ஆப்னுயாத்** | = | ஸம்பந்திக்காது. |

கழற்றப்பட்ட பாம்புச்சட்டையில் பிடித்த நெருப்பு முதலியவை பாம்பை எரிக்காததுபோல் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களைச் சார்ந்த தர்மங்கள் ஆத்மா வைச்சாராது. ஸ்தூல சரீரம், கைகால்களுடன் கூடிய, கண்ணில் தென்படும் சரீரம். அதன் தர்மம், வியாதி, மூப்பு, மரணம் முதலியவை. ஸூக்ஷ்ம சரீரம்: - ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஐந்து பிராணன்கள், மனது,

புத்தி, ஆகிய பதினேழும் சேர்ந்தது. இவற்றின் தர்மம். குருட்டு, செவிட்டுத்தன்மைகள், பசிதாகங்கள், ஸங்கல்ப விகல்பங்கள், காரியத்தைச் செய்தல், சுகம், துக்கம் இவைகளாகும். காரணசரீரம் என்பது அக்ஞானமாகும். அதன் தர்மம் மறைத்தல். இவைகள் அனைத்தும் ஆத்மாவைச் சேரா. **(16)**

**(அவதாரிகை)** ஆத்மாவில் இருப்பதுபோல் தோன்றுகிறதே எனில்: -

**त्यक्तां त्वमहिर्यद्वदात्मत्वेन न मन्यते ।**
**आत्मत्वेन सदा ज्ञानी त्यक्तदेहत्रयं तथा ॥ १७ ॥**

**த்யக்தாம் த்வமஹிர்யத்3வதா3த்மத்வேன ந மன்யதே ।**
**ஆத்மத்வேன ஸதா3 ஜ்ஞானீ த்யக்ததே3ஹத்ரயம் ததா2 ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **यद्वत्**<br>**யத்3வத்** | = | எவ்வாறு, |
| **अहिः**<br>**அஹி:** | = | பாம்பு, |
| **त्यक्तां**<br>**த்யக்தாம்** | = | கழற்றப்பட்ட, |
| **त्वचं**<br>**த்வசம்** | = | சட்டையை, |
| **आत्मत्वेन**<br>**ஆத்மத்வேன** | = | தான் ஆக, |
| **न मन्यते**<br>**ந மன்யதே** | = | எண்ணுதோ, |
| **तथा**<br>**ததா2** | = | அவ்விதமே, |
| **ज्ञानी**<br>**ஜ்ஞானீ** | = | ஞானியானவன், |
| **त्यक्तदेहत्रयं**<br>**த்யக்ததே3ஹத்ரயம்** | = | அபிமானத்தைவிட்ட ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை, |
| **सदा**<br>**ஸதா3** | = | எப்பொழுதும், |
| **आत्मत्वेन**<br>**ஆத்மத்வேன** | = | ஆத்மாவாக, |
| **न मन्यते**<br>**ந மன்யதே** | = | எண்ண மாட்டான். |

ஸர்ப்பம் தான் கழட்டிய சட்டையை தான் என்று நினைக்காததுபோன்று ஞானியும் ஆத்மாவன்று என்று அறிந்த ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை ஆத்மாவாக நினைப்பதில்லை இவ்விதம் சரீரத்தில் ஆத்மா என்ற எண்ணம் இல்லாத தால் அதன் தர்மங்களும் ஆத்மாவிற்கு இல்லை. எவ்விதமெனில் தேகத்திற்கும் ஆத்மாவிற்கும் அத்யாஸம் என்ற ஸம்பந்தத்தைத்தவிர வேறு ஸம்யோகம் முதலான ஸம்பந்தம் ஸம்பவிக்காது அவ்விதம் ஸம்பவித்தால் அக்நியின் ஸம்பந் தத்தினால் ஜலத்திற்கு உஷ்ணம் ஏற்படுவதுபோல் ஏற்படலாம். அத்யாஸ ஸம்பந் தமோ ப்ரமஞானமே. சிவந்த மேகத்தைப் பார்த்து நெருப்பு எரிகிறது என்று தோன்றி னாலும் அருகில் சென்றால் நெருப்பு காணப்படுவதில்லை. அவ்வாறே மூன்று தேகங்களும் ஆத்மா என்ற ப்ரமம் இருக்கும்வரை ஆத்மாவில் சுகதுக்காதிகள் தோன்றும். பஞ்சகோச விவேகத்தினால் அவை ஆத்மாவன்று என்று தெரிந்தபின் அவைகளின் தர்மங்களும் ஆத்மாவில் தோன்றுவதில்லை. இவ்விஷயத்தில்

**न ह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति ।**
**अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः**

**ந ஹ வை ஸஶரீரஸ்ய ஸத꞉ ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி ।**
**அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத꞉**

என்ற சாஸ்திரம் பிரமாணமாகும். சரீராபிமானம் இருப்பவனுக்கு சுகதுக்கங்கள் நீங்குவதில்லை. அந்த அபிமானத்தை விட்டவனுக்கு சுகதுக்கங்கள் ஏற்படுவதில்லை. **(17)**

**(அவதாரிகை)** முன் சுலோகத்தின் விஷயத்தையே விளக்குகிறார்: -

**अहिनिर्व्वयनीनाशाद हेर्नाशो यथा न हि ।**
**देहत्रयविनाशेन नात्मनाशस्तथा भवेत् ॥ १८ ॥**

**அஹிநிர்வ்வயனீநாஶாத³ ஹேர்நாஶோ யதா² ந ஹி ।**
**தே³ஹத்த்ரயவிநாஶேந நாத்மநாஶஸ்ததா² ப⁴வேத் ॥ 18 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** யதா² | = | எவ்விதம், |
| **अहिनिर्व्वयनीनाशात्** அஹிநிர்வ்வயனீநாஶாத் | = | பாம்பு சட்டையின் அழிவினால், |
| **अहेः** அஹே꞉ | = | பாம்பிற்கு, |
| **नाशः** நாஶ꞉ | = | அழிவு, |
| **नहि** நஹி | = | இல்லையோ, |

| | | |
|---|---|---|
| **तथा** **ததா²** | = | அவ்விதமே, |
| **देहत्रयविनाशेन** **தே³ஹத்த்ரயவிநாஶேன** | = | மூன்று தேகங்களின் அழிவினுலும், |
| **आत्मनाशः** **ஆத்மநாஶ:** | = | ஆத்மாவிற்கு நாசம், |
| **न भवेत्** **ந ப⁴வேத்** | = | ஏற்படாது. |

பாம்பின் சட்டை அழிவதால் பாம்பு அழிவதில்லை. அவ்வாறே மூவகை சரீரங்களின் அழிவால் ஆத்மா அழிவதில்லை. இதையே

**देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ॥**

**(தே³ஹீ நித்யமவத்⁴யோ(அ)யம் தே³ஹே ஸர்வஸ்ய பா⁴ரத ॥)**

என்ற கீதா வாக்யமும் அறிவிக்கிறது. (18)

**(அவதாரிகை)** ஆத்மாவில் தேகம் முதலானவற்றின் தர்மங்களும், அவைகளில் ஆத்மாவின் தர்மங்களும் தோன்றுவது ப்ரமம் என்பதை உதாரணங்கள் மூலம் விளக்குகிறுர்: --

**तक्रादि लवणोपेतमज्ञैर्लवणवद्यथ ।**
**आत्मा स्थूलादिसंयुक्तो दृश्यते स्थूलकादिवत् ॥ १९ ॥**

**தக்ராதி³ லவணோபேதமஜ்ஞைர்லவணவத்³யத² ।**
**ஆத்மா ஸ்தூ²லாதி³ஸம்யுக்தோ த்³ருஶ்யதே ஸ்தூ²லகாதி³வத் ॥ 19 ॥**

| | | |
|---|---|---|
| **लवणोपेतं** **லவணோபேதம்** | = | உப்புடன் கூடிய, |
| **तक्रादि** **தக்ராதி³** | = | மோர் முதலியவை, |
| **लवणवत्** **லவணவத்** | = | உப்புச் சுவையுடன் கூடியதாக, |
| **यथा** **யதா²** | = | எவ்விதம், |
| **अज्ञैः** **அஜ்ஞை:** | = | அறிவற்றவர்களால், |
| **दृश्यते** **த்³ருஶ்யதே** | = | காணப்படுகின்றதோ, |

| | | |
|---|---|---|
| **तथा** <br> **ததா²** | = | அவ்விதம், |
| **स्थूलादिसंयुक्तः** <br> **ஸ்தூ²லாதி³ஸம்யுக்த:** | = | ஸ்தூலம் முதலிய சரீரங்களுடன் கூடிய, |
| **आत्मा** <br> **ஆத்மா** | = | ஆத்மாவானது, |
| **स्थूलकादिवत्** <br> **ஸ்தூ²லகாதி³வத்** | = | பருத்தல் முதலிய தர்மங்களுடன் கூடியதாக, |
| **दृश्यते** <br> **த்³ருஶ்யதே** | = | தவருக எண்ணப்படுகின்றது. |

அதிக உப்புச்சேர்ந்த மோர் முதலானவற்றை உப்புச் சுவையுள்ளதாக அறிவற்றவர்கள் சொல்கின்றனர். அவ்வாறே பருத்தல், இளைத்தல், முதலியவற்று டன் கூடிய சரீரத்துடன் ஒன்ருக நினைத்து ஆத்மாவையும் பருத்தல், இளைத்தல் இவைகளுடன் கூடியதாகச் சொல்கின்றனர். இவ்விதம் சரீரத்தின் தர்மம் ஆத்மாவில் தோற்றத்திற்கு மோர் உதாரணமாகக் கூறப்பட்டது. **(19)**

**(அவதாரிகை)** ஆத்மாவின் தர்மங்கள் தேகாதிகளில் தோன்றுவதைக் கூறுகிருர்: -

**अयः काष्ठादिकं यद्वद्वह्निवद्वह्नियोगतः ।**
**भाति स्थूलादिकं सर्वमात्मवत्स्वात्मयोगतः ॥ २० ॥**

**அய: காஷ்டா²தி³கம் யத்³வத்³வத்³விஹ்நியோக³த: ।**
**பா⁴தி ஸ்தூ²லாதி³கம் ஸர்வமாத்மவத்ஸ்வாத்மயோக³த: ॥ 20 ॥**

| | | |
|---|---|---|
| **यद्वत्** <br> **யத்³வத்** | = | எவ்வாறு, |
| **अयः काष्ठादिकं** <br> **அய: காஷ்டா²தி³கம்** | = | இரும்பு, விறகு முதலியவை, |
| **वह्नियोगतः** <br> **வஹ்நியோக³த:** | = | அக்னியின் சேர்க்கையினல், |
| **वह्निवत्** <br> **வஹ்னிவத்** | = | அக்னிபோன்று, |
| **भाति** <br> **பா⁴தி** | = | பிரகாசிக்கின்றதோ, |
| **तद्वत्** <br> **தத்³வத்** | = | அவ்விதமே, |

| | | |
|---|---|---|
| स्थूलादिकं<br>ஸ்தூ²லாதி³கம் | = | ஸ்தூலம் முதலிய, |
| सर्वं<br>ஸர்வம் | = | எல்லாம், |
| स्वात्मयोगतः<br>ஸ்வாத்மயோக³த꞉ | = | தன் ஆத்மாவின் ஸம்பந்தத்திஞல், |
| आत्मवत्<br>ஆத்மவத் | = | ஆத்மாவைப் போன்று, |
| भाति<br>பா⁴தி | = | பிரகாசிக்கின்றது. |

இரும்பு, விறகு முதலியவை நெருப்பின் சேர்க்கையால் நெருப்பைப்போல் தோன்றுகின்றது. அவ்வாறு ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களும் ஆத்மாவின் சேர்க்கையால் ஆத்மாவைப்போல் தோன்றுகின்றன. ஆத்மாவின் தர்மங்கள், ஸத்வம் (இருப்பு) ப்ரகாசம் (ஞானம்) சுகம் (ஆனந்தம்) இவைகளாகும். முறையாக தேவதத்தஞகிய நான் இருக்கிறேன், அறிகிறேன். சுகமுள்ளவன் என்று ஸ்தூல சரீரத்தில் அந்த தர்மங்கள் தோன்றுகின்றன. இவ்வாறே மற்ற சரீரங்களிலும் ஊகித்துக்கொள்ள வேண்டும். **(20)**

**(அவதாரிகை)** இதையே விளக்குகிருர்: -

**दाहको नैव दाह्यं स्यात् दाह्यं तद्वन दाहकः ।**
**नैवात्माऽयमनात्मा स्यादनात्माऽयं न चात्मकः ॥ २१ ॥**

**தா³ஹகோ நைவ தா³ஹ்யம் ஸ்யாத் தா³ஹ்யம் தத்³வன தா³ஹக꞉ ।**
**நைவாத்மா(அ)யமனாத்மா ஸ்யாத³னாத்மா(அ)யம் ந சாத்மக꞉ ॥ 21 ॥**

| | | |
|---|---|---|
| यद्वत्<br>யதா²த் | = | எவ்விதம், |
| दाहकः<br>தா³ஹக꞉ | = | எரிக்கும் பொருள், |
| दाह्यं<br>தா³ஹ்யம் | = | எரிக்கப்படும் பொருளாக, |
| नैव स्यात्<br>நைவ ஸ்யாத் | = | ஆகாதோ, |
| दाह्यं<br>தா³ஹ்யம் | = | எரிக்கப்படும் பொருள், |
| दाहकः<br>தா³ஹக꞉ | = | எரிக்கும் பொருளாகவும், |

| | | |
|---|---|---|
| **नैव स्यात्** **நைவ ஸ்யாத்** | = | ஆகாதோ, |
| **तद्वत्** **தத்³வத்** | = | அதுபோன்று, |
| **अयम्** **அயம்** | = | இந்த, |
| **आत्मा** **ஆத்மா** | = | ஆத்மாவானது, |
| **अनात्मा** **அனாத்மா** | = | அநாத்மாவாக (ஜடமாக)வும், |
| **अयम् अनात्मा** **அயம் அனாத்மா** | = | இந்த ஆத்மாவிற்கு வேறான ஜடப்பொருள், |
| **आत्मकः** **ஆத்மக:** | = | ஆத்மாவாகவும், |
| **नैव स्यात्** **நைவ ஸ்யாத்** | = | ஆகாது. |

எரிக்கும் அக்கி முதலானவை எரிக்கப்படும் விறகு முதலியவைகளாக ஆகா. எரிக்கப்படும் விறகு முதலியவை எரிக்கும் அக்னியாக ஆகா. அவ்வாறு அறிகிற (ஸாக்ஷியான) ஆத்மா அறியப்படும் சரீரம் முதலியவைகளாக ஆகாது. அறியப்படும் சரீரம் முதலியவை அறியும் ஆத்மாவாக ஆகா. எவ்வாறெனில் எனது சரீரம், கண், மூக்கு, பிராணன், மனம், புத்தி என்றும், தூங்குகையில் நான் ஒன்றும் அறியேன் என்றும், மூன்று சரீரங்களும் அறியப்படுவதால் இவைகளைக் காட்டிலும் அறியும் ஆத்மா வேறாக ஆகின்றது. **(21)**

**(அவதாரிகை)** ஆத்மா ஸாக்ஷி என்பதை விளக்குகிறார்: -

**प्रमेयादित्रयं सार्थं भानुना घट कुड्यवत् ।**
**येन भाति स एवाहं प्रमेयादिविलक्षणः ॥ २२ ॥**

**ப்ரமேயாதி³த்ரயம் ஸார்த²ம் பா⁴னுனா க⁴ட குட்³யவத் ।**
**யேன பா⁴தி ஸ ஏவாஹம் ப்ரமேயாதி³விலக்ஷண: ॥ 22 ॥**

| | | |
|---|---|---|
| **प्रमेयादित्रयं** **ப்ரமேயாதி³த்ரயம்** | = | ப்ரமேயம் முதலான மூன்றும் (ப்ரமேயமான பொருள்கள், பிரமாணமான அறிவு, ப்ரமாதாவான அறிபவன்), |
| **सार्थं** **ஸார்த²ம்** | = | ஒரே சமயத்தில், |

| | | |
|---|---|---|
| **भानुना** पா⁴னுனை | = | சூரியனுல், |
| **घट कुड्यवत्** க⁴ட குட்³யவத் | = | குடம், சுவர் இவைகள் போல், |
| **येन** யேன | = | எந்த ஆத்மாவினுல், |
| **भाति** பா⁴தி | = | விளங்குகின்றதோ, |
| **प्रमेयादिविलक्षण:** ப்ரமேயாதி³விலக்ஷண: | = | ப்ரமேயம் முதலியவற்றைக் காட்டிலும் வேறுன, |
| **स एव** ஸ ஏவ | = | அந்த ஆத்மாவே, |
| **अहम्** அஹம் | = | நான். |

சூரியனுல் குடம், சுவர் முதலியவை ஒரே சமயத்தில் விளங்குகின்றது. அவைகளைவிட சூரியன் வேறுனவனே. அவ்வாறே ப்ரமேயம் (அறியப்படும் பொருள்) ப்ரமாணம் (அறிவு) ப்ரமாதா (அறிகின்றவன்) ஆகிய மூன்றும் ஒரே சமயத்தில் எதனுல் விளங்குகின்றதோ அது அவற்றினின்றும் வேறுபட்டது. அதையே ஸாக்ஷி என்பர். அந்த ஸாக்ஷியே நான். **(22)**

**(அவதாரிகை)** ப்ரமேயம் முதலியவற்றிற்கு ஸ்வயம் ப்ரகாசம் இல்லை: -

**भानुस्फुरणतो यद्वत्स्फुरतीव घटादिकं ।**
**स्फुरतीव प्रमेयादिरात्मस्फुरणतस्तथा ॥ २३ ॥**

**பா⁴னுஸ்பு²ரணதோ யத்³வத்ஸ்பு²ரதீவ க⁴டாதி³கம் ।**
**ஸ்பு²ரதீவ ப்ரமேயாதி³ராத்மஸ்பு²ரணதஸ்ததா² ॥ 23 ॥**

| | | |
|---|---|---|
| **यद्वत्** யத்³வத் | = | எவ்வாறு, |
| **भानुस्फुरणत:** பா⁴னுஸ்பு²ரணத: | = | சூரியனது பிரகாசத்தினுல், |
| **घटादिकं** க⁴டாதி³கம் | = | குடம் முதலியவை, |
| **स्फुरतीव** ஸ்பு²ரதீவ | = | பிரகாசம் உடையவைபோல இருக்கின்றதோ, |
| **तथा** ததா² | = | அவ்விதமே, |

**प्रमे यादि:** = ப்ரமேயம் முதலியவை,

**ப்ரமே யாதி³:**

**आत्मस्फुरणत:** = ஆத்மாவின் பிரகாசத்தினுல்,

**ஆத்மஸ்பு²ரணத:**

**स्फुरतीव** = தானே பிரகாசிப்பவை போன்று,

**ஸ்பு²ரதீவ** (தோன்றுகின்றது)

(உண்மையில்) சூரியன் ஒளியினுல் விளங்கும் குடம் முதலியவை, தானே விளங்குவதாகத் தோன்றுவதுபோல் ஆத்மாவின் பிரகாசத்தினுலேயே விளங்குகின்ற ப்ரமேயம் முதலானவை தாங்களே ப்ரகாசிப்பவைபோலத் தோன்றுகின்றன. இவ்விஷயத்தில

**तस्य भासा सर्वमिदं विभाति**

**(தஸ்ய பா⁴ஸா ஸர்வமித³ம் விபா⁴தி)**

என்பது பிரமாணமாகும்

**(அவதாரிகை)** ஆத்மாவின் ஆனந்தமே மற்றவைகளில் தோன்றுகின்றது: -

**पिष्टादिर्गुलसंपर्काद्गुलवत्प्रीतिमान्यथा ।**
**आत्मयोगात्प्रमेयादिरात्मवत्प्रीतिमान्भवेत् ॥ २४ ॥**

**பிஷ்டாதி³ர்கு³லஸம்பர்காத்³கு³லவத்ப்ரீதிமான்யதா² ।**
**ஆத்மயோகா³த்ப்ரமேயாதி³ராத்மவத்ப்ரீதிமான்ப⁴வேத் ॥ 24 ॥**

**पिष्टादि:** = மா முதலியவை,

**பிஷ்டாதி³:**

**यथा** = எவ்விதம்,

**யதா²**

**गुलसंपर्कात्** = வெல்லத்தின் சேர்க்கையால்,

**கு³லஸம்பர்காத்**

**गुलवत्** = வெல்லம் போன்று,

**கு³லவத்**

**प्रीतिमान्** = பிரியத்தை உண்டுபண்ணுகின்றதாக,

**ப்ரீதிமான்**

**भवेत्** = ஆகின்றதோ,

**ப⁴வேத்**

**तथा** = அவ்விதம்,

**ததா²**

| | | |
|---|---|---|
| **प्रमेयादिः**<br>**ப்ரமேயாதி³꞉** | = | ப்ரமேயம் முதலியவை, |
| **आत्मयोगात्**<br>**ஆத்மயோகா³த்** | = | ஆத்மாவின் ஸம்பந்தத்தினுல், |
| **आत्मवत्**<br>**ஆத்மவத்** | = | ஆத்மாவினிடத்தில்போல், |
| **प्रतिमान्**<br>**ப்ரதிமான்** | = | பிரீதிகொள்ளத்தக்கதாக, |
| **भवेत्**<br>**ப⁴வேத்** | = | ஆகின்றது. |

எவ்விதம் மாவு முதலியவைகளில் வெல்லம் சேர்த்ததும் அந்த மாவில், வெல்லத்திலபோல ப்ரீதி ஏற்படுகின்றதோ, அவ்வாறே ஆத்மாவின் சேர்க்கையால் ப்ரமேயம் முதலானவற்றில் ப்ரீதி (ஆனந்தம்) உண்டாகின்றது.

### विज्ञानमानन्दं ब्रह्म

**(விஜ்ஞானமானந்த³ம் ப்³ரஹ்ம)**

'ஆத்மா சுக ரூபம்' என்று வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் ஆத்மாவின் சேர்க்கையினாலேயே மற்றவைகளில் ஆனந்தம் உண்டாகின்றது.

**घटनीरान्नपिष्टानामुष्णत्वं वह्नियोगतः ।**
**वह्निं विना कथं तोमुष्णता स्याद्यथा क्वचित् ॥ २५ ॥**

**க⁴டநீரான்னபிஷ்டாநாமுஷ்ணத்வம் வஹ்நியோக³த꞉ ।**
**வஹ்னிம் வினு கத²ம் தோமுஷ்ணதா ஸ்யாத்³யதா² க்வசித் ॥ 25 ॥**

**भूतभौतिकदेहानां स्फूर्तिता स्वात्मयोगतः ।**
**विनात्मानं कथं तेषां स्फूर्तिता स्यात्तथा क्वचित् ॥ २६ ॥**

**பூ⁴தபௌ⁴திகதே³ஹானும் ஸ்பூ²ர்திதா ஸ்வாத்மயோக³த꞉ ।**
**வினுத்மானம் கத²ம் தேஷாம் ஸ்பூ²ர்திதா ஸ்யாத்ததா² க்வசித் ॥ 26 ॥**

| | | |
|---|---|---|
| **घटनीरान्नपिष्टानां**<br>**க⁴டநீரான்னபிஷ்டானும்** | = | குடம், ஜலம், அன்னம், மாவு இவைகளுக்கு, |
| **वह्नियोगतः**<br>**வஹ்நியோக³த꞉** | = | அக்னியின் ஸம்பந்தத்தினுல், |
| **उष्णत्वं**<br>**உஷ்ணத்வம்** | = | சூடு உண்டாகின்றது, |

| | | |
|---|---|---|
| **तेषां** | = | அவைகளுக்கு, |
| **தேஷாம்** | | |
| **वहिं विना** | = | அக்னி இல்லாமல், |
| **வஹிம் வினா** | | |
| **क्वचित्** | = | ஒரு இடத்திலாவது, |
| **க்வசித்** | | |
| **उष्णता** | = | சூடு, |
| **உஷ்ணதா** | | |
| **कथं स्यात्** | = | எவ்வாறு உண்டாகும்? |
| **கத²ம் ஸ்யாத்** | | |
| **यथा** | = | இது எவ்வாறோ, |
| **யதா²** | | |
| **तथा** | = | அவ்வாறு, |
| **ததா²** | | |
| **भूतभौतिकदेहानां** | = | பூதங்கள், (பூமி முதலியவை) |
| **பூ⁴தபௌ⁴திகதே³ஹானாம்** | | அவைகளின் காரியங்கள், தேஹங்கள் இவைகளுக்கு, |
| **स्वात्मयोगतः** | = | தன் ஆத்மாவின் ஸம்பந்தத்தினால், |
| **ஸ்வாத்மயோக³த:** | | |
| **स्फूर्तिता** | = | பிரகாசமானது, (உண்டாகின்றது). |
| **ஸ்பூ²ர்திதா** | | |
| **तेषां** | = | அவைகளின், |
| **தேஷாம்** | | |
| **स्फूर्तिता** | = | பிரகாசமானது, |
| **ஸ்பூ²ர்திதா** | | |
| **आत्मानं विना** | = | ஆத்மா இல்லாமல், |
| **ஆத்மானம் வினா** | | |
| **क्वचित्** | = | ஒரு இடத்திலாவது, |
| **க்வசித்** | | |
| **कथं स्यात्** | = | எப்படி உண்டாகும்? |
| **கத²ம் ஸ்யாத்** | | |

குடம், நீர், அன்னம், மாவு முதலியவை அக்நியின் சேர்க்கையினாலேயே சூட்டைப் பெறுகின்றன. அக்நியின் சேர்க்கை இல்லையெனில் ஓரிடத்திலும் அவை களுக்குச் சூடு கிடையாது இதுபோல பஞ்சபூதங்கள், அவைகளால் உண்டான பொரு ள்கள், தேகங்கள் இவைகளுக்குப் பிரகாசம் ஆத்ம ஸம்பந்தத்தினாலேயே ஏற்படுகி ன்றது. ஆத்மாவின் ஸம்பந்தம் இல்லையெனில் இவைகளுக்குப் பிரகாசமும் இல்லை.

**(25-26)**

**(அவதாரிகை)** பல சரீரங்களிலும் ஆத்மா ஒன்றே: -

**नानाविधेषु कुम्भेषु वसत्येकं नभो यथा ।**
**नानाविधेषु देहेषु तद्वदेको वसाम्यहम् ॥ २७ ॥**

**நாநாவிதே⁴ஷு கும்பே⁴ஷு வஸத்யேகம் நபோ⁴ யதா² ।**
**நாநாவிதே⁴ஷு தே³ஹேஷு தத்³வதே³கோ வஸாம்யஹம் ॥ 27 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** யதா² | = | எவ்விதம், |
| **नानाविधेषु** நாநாவிதே⁴ஷு | = | பலவிதமான, |
| **कुम्भेषु** கும்பே⁴ஷு | = | குடங்களில், |
| **एकं** ஏகம் | = | ஒரே, |
| **नभः** நப⁴: | = | ஆகாயம், |
| **वसति** வஸதி | = | இருக்கின்றதோ, |
| **तद्वत्** தத்³வத் | = | அதுபோல, |
| **नानाविधेषु** நாநாவிதே⁴ஷு | = | பலவிதமான, |
| **देहेषु** தே³ஹேஷு | = | சரீரங்களில், |
| **अहं** அஹம் | = | நான், |
| **एकः** ஏக: | = | ஒருவனே, |
| **वसामि** வஸாமி | = | வசிக்கிறேன். |

எவ்வாறு பலவிதமான குடங்களில் உள்ள ஆகாசம் ஒன்றே, அவ்வாறே பலவித தேஹங்களிலும் நான் ஒருவனே ஆத்மாவாக வசிக்கின்றேன்.

**क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्तेषु भारत**

**(க்ஷேத்ரஜ்ஞும் சாபி மாம் வித்³தி⁴ ஸர்வக்ஷேத்தேஷு பா⁴ரத)**

என்று க்ஷேத்ரங்களான சரீரங்கள் அநேகம் என்றும் க்ஷேத்ரக்ஞுன ஆத்மா ஒன்று என்றும் கூறப்பட்டிருக்கின்றது. **(27)**

(**அவதாரிகை**) தேஹத்தின் விசேஷங்கள் ஆத்மாவில் இல்லை: -

**नानाविधत्वं कुम्भानां न यात्येव यथा नभः ।**
**नानाविधत्वं देहानां तद्वदेव न याम्यहम् ॥ २८ ॥**

**நாநாவித⁴த்வம் கும்பா⁴நாம் ந யாத்யேவ யதா² நப⁴: ।**
**நாநாவித⁴த்வம் தே³ஹாநாம் தத்³வதே³வ ந யாம்யஹம் ॥ 28 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** <br> **யதா²** | = | எவ்விதம், |
| **नभः** <br> **நப⁴:** | = | ஆகாயமானது, |
| **कुम्भानां** <br> **கும்பா⁴நாம்** | = | குடங்களுடைய, |
| **नानाविधत्वं** <br> **நாநாவித⁴த்வம்** | = | பலவிதத் தன்மையை, |
| **नैव याति** <br> **நைவ யாதி** | = | அடைவதில்லையோ, |
| **तद्वदेव** <br> **தத்³வதே³வ** | = | அதுபோல், |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **देहानां** <br> **தே³ஹாநாம்** | = | சரீரங்களுடைய, |
| **नानाविधत्वं** <br> **நாநாவித⁴த்வம்** | = | பலவிதத் தன்மையை, |
| **न यामि** <br> **ந யாமி** | = | அடைவதில்லை. |

எவ்விதம் குடங்களில் உள்ள பலவிதத்தன்மை, அதிலுள்ள ஆகாயத்தை அடைவதில்லையோ, அவ்வாறு சரீரங்களில் உள்ள பருத்தல், இளைத்தல், குட்டை, உயரம் முதலியவை என்னிடம் வருவதில்லை. **(28)**

**यथा घटेषु नष्टेषु घटाकाशो न नश्यति ।**
**तथा देहेषु नषेषु नैव नश्यामि सर्वगः ॥ २९ ॥**

**யதா² க⁴டேஷு நஷ்டேஷு க⁴டாகாஶோ ந நஶ்யதி ।**
**ததா² தே³ஹேஷு நஷேஷு நைவ நஶ்யாமி ஸர்வக³: ॥ 29 ॥**

| | | |
|---|---|---|
| **यथा**<br>**யதா²** | = | எவ்விதம், |
| **घटेषु**<br>**க⁴டேஷு** | = | குடங்கள், |
| **नष्टेषु**<br>**நஷ்டேஷு** | = | அழிந்தபொழுது, |
| **घटाकाश:**<br>**க⁴டாகாஶ:** | = | குடங்களில் உள்ள ஆகாயம், |
| **न नश्यति**<br>**ந நஶ்யதி** | = | அழிவதில்ஂலயோ, |
| **तथा**<br>**ததா²** | = | அவ்விதம், |
| **देहेषु**<br>**தே³ஹேஷு** | = | சரீரங்கள், |
| **नषेषु**<br>**நஷேஷு** | = | அழிந்த பொழுது, |
| **सर्वग:**<br>**ஸர்வக³:** | = | எங்கும் நிறைந்த, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **नैव नश्यामि**<br>**நைவ நஶ்யாமி** | = | அழிவதில்ஂல. |

எவ்வாறு குடங்கள் அழிந்தபோதிலும் அவைகளில் உள்ள ஆகாசம் அழிவதில்ஂலயோ அவ்வாறே சரீரம் அழிந்தாலும் எங்கும் உள்ள நான் அழியமாட்டேன். ஆத்மாவை ச்ருதியில்

**आकाशवत् सर्वगतश्च नित्य:**

**(ஆகாஶவத் ஸர்வக³தஶ்ச நித்ய:)**

என்று வியாபகமாகக் கூறி இருக்கின்றது. தார்க்கிகர் யுக்தியால் வியாபகமான ஆகாயத்திற்கே அழிவில்ஂல என்று சொல்லுகின்றனர். அந்த ஆகாசத்திற்கும் காரணமான ஆத்மாவிற்கு அழிவு இல்லை என்பதைக் கூறவும்வேண்டுமோ? **(29)**

## उत्तमादीनि पुष्पाणि वर्तन्ते सूत्रके यथा ।
## उत्तमाद्यास्तथा देहा वर्तन्ते मयि सर्वदा ॥ ३० ॥

**உத்தமாதீ³னி புஷ்பாணி வர்தந்தே ஸூத்ரகே யதா² ।**
**உத்தமாத்³யாஸ்ததா² தே³ஹா வர்தந்தே மயி ஸர்வதா³ ॥ 30 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** யதா² | = | எவ்விதம், |
| **सूत्रके** ஸூத்ரகே | = | நூலில், |
| **उत्तमादीनि** உத்தமாதீ³னி | = | உயர்ந்தது, நடுத்தரம், தாழ்ந்தது முதலான, |
| **पुष्पाणि** புஷ்பாணி | = | புஷ்பங்கள், |
| **वर्तन्ते** வர்தந்தே | = | இருக்கின்றனவோ, |
| **तथा** ததா² | = | அவ்விதமே, |
| **उत्तमाद्या:** உத்தமாத்³யா: | = | உத்தம, மத்யம, அதமமான, |
| **देहा:** தே³ஹா: | = | சரீரங்கள், |
| **मयि** மயி | = | என்னிடத்தில், |
| **सर्वदा** ஸர்வதா³ | = | எப்பொழுதும், |
| **वर्तन्ते** வர்தந்தே | = | இருக்கின்றன. |

ஓர் நூலில் தொடுக்கப்பட்ட உயர்ந்ததும், நடுத்தரமானதும் சாதாரணமானது மான புஷ்பங்கள் அந்நூலில் உள்ளனவோ அதுபோன்று உத்தம, மத்யம அதமமான தேஹங்கள் என்னிடம் (ஆத்மாவிடம்) இருக்கின்றன. தாமரை, மல்லிகை, அரளி புஷ்பங்களால் கட்டிய மாஸலயில் அவைகளுள் உள்ள வேற்றுமையை அடையாத நூல் ஒன்றே எல்லாப் புஷ்பங்களுடனும் ஸம்பந்தப்பட்டிருக்கின்றது. அவ்விதமே தேவசரீரம், மனித சரீரம், பசுசரீரம் இவைகளில் இருக்கும் ஆத்மாவும் அவைகஊள க்காட்டிலும் வேறுன ஒன்றே.

## शुनि चैव श्वपाके च पण्डिता: समदर्शिन:

**ஶுனி சைவ ஶ்வபாகே ச பண்டி³தா: ஸமத³ர்ஶின:**

என்று கீதையில் இவ் விஷயம் கூறப்பட்டிருக்கின்றது. (30)

**यथा न संस्पृशेत्सूत्रं पुष्पाणामुत्तमादिता ।**
**तथा नैकं सर्वगं मां देहानामुत्तमादिता ॥ ३१ ॥**

**யதா² ந ஸம்ஸ்ப்ருஶேத்ஸூத்ரம் புஷ்பாணாமுத்தமாதி³தா ।**
**ததா² நைகம் ஸர்வக³ம் மாம் தே³ஹாநாமுத்தமாதி³தா ॥ 31 ॥**

**पुष्पेषु तेषु नष्टेषु यद्वत्सूत्रं न नश्यति ।**
**तथा देहेषु नष्टेषु नैव नश्याम्यहं सदा ॥ ३२ ॥**
**புஷ்பேஷு தேஷு நஷ்டேஷு யத்³வத்ஸூத்ரம் ந நஶ்யதி ।**
**ததா² தே³ஹேஷு நஷ்டேஷு நைவ நஶ்யாம்யஹம் ஸதா³ ॥ 32 ॥**

| | | |
|---|---|---|
| **यथा**<br>**யதா²** | = | எவ்விதம், |
| **सूत्रं**<br>**ஸூத்ரம்** | = | நூலை, |
| **पुष्पाणां**<br>**புஷ்பாணும்** | = | பூக்களுடைய, |
| **उत्तमादिता**<br>**உத்தமாதி³தா** | = | உயர்ந்தது, நடுவானது, தாழ்ந்தது என்ற தன்மை, |
| **न संस्पृशेत्**<br>**ந ஸம்ஸ்ப்ருஶேத்** | = | ஒட்டாதோ, |
| **तथा**<br>**ததா²** | = | அவ்விதம், |
| **एकं**<br>**ஏகம்** | = | ஒன்றானவனும், |
| **सर्वगं**<br>**ஸர்வக³ம்** | = | எங்கும் நிறைந்தவனுமான, |
| **मां**<br>**மாம்** | = | என்னை, |
| **देहानां**<br>**தே³ஹாநும்** | = | சரீரங்களுடைய, |
| **उत्तमादिता**<br>**உத்தமாதி³தா** | = | மேல், நடு, தாழ்ந்தது என்ற தன்மை, |
| **न (संस्पृशेत्)**<br>**ந (ஸம்ஸ்ப்ருஶேத்)** | = | ஒட்டாது. |

| | | |
|---|---|---|
| **यद्वत्**<br>**யத்³வத்** | = | எவ்விதம், |
| **तेषु**<br>**தேஷு** | = | அந்த, |
| **पुष्पेषु**<br>**புஷ்பேஷு** | = | பூக்கள், |
| **नष्टेषु**<br>**நஷ்டேஷு** | = | அழிந்தபொழுதும், |
| **सूत्रं**<br>**ஸூத்ரம்** | = | நூல், |
| **न नश्यति**<br>**ந நஶ்யதி** | = | அழிவதில்லையோ, |
| **तथा**<br>**ததா²** | = | அவ்விதம், |
| **देहेषु**<br>**தே³ஹேஷு** | = | சரீரங்கள், |
| **नष्टेषु**<br>**நஷ்டேஷு** | = | அழிந்தபொழுதும், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **नैव नश्यामि**<br>**நைவ நஶ்யாமி** | = | அழிவதேயில்லை. |

எவ்விதம் புஷ்பங்களுள் உள்ள உயர்வு தாழ்வு நூலைச் சார்வதில்லையோ அவ்வாறே ஒருவனும் எங்கும் நிறைந்தவனுமான என்னை தேஹங்களின் உயர்வு தாழ்வு அணுகுவதில்லை. மாலையிலுள்ள புஷ்பங்கள் அழிந்தாலும் அதனால் நூல் அழிவதில்லை. அதேபோன்று தேஹம் அழிந்தாலும் எனக்கு அழிவு இல்லை. கீதையிலும்

**"अविनाशि तु तद्विद्धि " "देही नित्यमवध्यो ऽयम् ”**

**("அவிநாஶி து தத்³வித்³தி⁴ " "தே³ஹீ நித்யமவத்⁴யோ (அ)யம்")**

'ஆத்மாவிற்கு அழிவு இல்லை' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. **(31-32)**

**पर्यङ्करज्जुरन्ध्रेषु नानेवैकापि सूर्यभा ।**
**एकोऽप्यनेकवद्भाति तथा क्षेत्रेषु सर्वगः ॥ ३३ ॥**

**பர்யங்கரஜ்ஜுரந்த்4ரேஷு நானேவைகாபி ஸூர்யபா4 ।**
**ஏகோ(அ)ப்யனேகவத்3பா4தி ததா2 க்ஷேத்ரேஷு ஸர்வக3: ॥ 33 ॥**

**यथा** = எவ்விதம்,
**யதா2**

**सूर्यभा** = சூரியவெளிச்சம்,
**ஸூர்யபா4**

**एकापि** = ஒன்ருயினும்,
**ஏகாபி**

**पर्यङ्करज्जुरन्ध्रेषु** = ஊஞ்சல் சங்கிலிகளின் இடைகளில்
**பர்யங்கரஜ்ஜுரந்த்4ரேஷு**

**नानेव** = அநேகம்போல,
**நானேவ**

**भाति** = தோன்றுகின்றதோ,
**பா4தி**

**तथा** = அவ்விதம்,
**ததா2**

**सर्वगः** = எங்கும் நிறைந்த (ஆத்மா),
**ஸர்வக3:**

**एकोऽपि** = ஒன்ருக இருப்பினும்,
**ஏகோ(அ)பி**

**क्षेत्रेषु** = சரீரங்களில்,
**க்ஷேத்ரேஷு**

**अनेकवत्** = அநேகம்போல,
**அனேகவத்**

**भाति** = தோன்றுகின்றது.
**பா4தி**

எவ்விதம் சூரியனுடைய ஒளி ஒன்ருக இருப்பினும் ஊஞ்சல் சங்கிலியின் பல துவாரங்களில் அநேகம்போல் தோன்றுகின்றதோ அவ்விதம் எங்கும் நிறைந்த ஆத்மா ஒன்ருக இருந்தபோதிலும் சரீரங்களில் பலவாகத் தோன்றுகின்றது. **(33)**

**रज्जुरन्ध्रस्थदोषादि सूर्यभां न स्पृशेद्यथा ।**
**तथा क्षेत्रस्थदोषादि सर्वगं मां न संस्पृशेत् ॥ ३४ ॥**

**ரஜ்ஜுரந்த்4ரஸ்த2தோ3ஷாதி3 ஸூர்யபா4ம் ந ஸ்ப்ருஶேத்3யதா2 ।**
**ததா2 க்ஷேத்ரஸ்த2தோ3ஷாதி3 ஸர்வக3ம் மாம் ந ஸம்ஸ்ப்ருஶேத் ॥ 34 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** <br> **யதா²** | = | எவ்வாறு, |
| **रज्जुरन्ध्रस्थदोषादि** <br> **ரஜ்ஜுரந்த்⁴ரஸ்த²தோ³ஷாதி³** | = | ஊஞ்சல் சங்கிலியின் இடையிலுள்ள குற்றம் முதலியவை, |
| **सूर्यभां** <br> **ஸூர்யபா⁴ம்** | = | சூரியபிரகாசத்தை, |
| **न स्पृशेत्** <br> **ந ஸ்ப்ருஶேத்** | = | தொடாதோ, |
| **तथा** <br> **ததா²** | = | அவ்வாறு, |
| **क्षेत्रस्थदोषादि** <br> **க்ஷேத்ரஸ்த²தோ³ஷாதி³** | = | சரீரங்களிலுள்ள குற்றம் முதலியவை, |
| **सर्वगं** <br> **ஸர்வக³ம்** | = | எங்கும் நிறைந்த, |
| **मां** <br> **மாம்** | = | என்னை (ஆத்மாவை), |
| **न संस्पृशेत्** <br> **ந ஸம்ஸ்ப்ருஶேத்** | = | தொடுவதில்லை. |

சங்கிலியின் துவாரங்களில் தென்படும் குற்றங்கள் அதில் உள்ள சூரியனது காந்தியைச் சாராதது போன்று சரீரங்களில் உள்ள குணதோஷங்கள் எங்கும் நிறைந்த என்னைச்சாராது. **(34)**

## तद्रज्जुरन्धनाशेषु नैव नश्यति सूर्यभा ।
## तथा क्षेत्रविनाशेषु नैव नश्यामि सर्वगः ॥ ३५ ॥

**தத்³ரஜ்ஜுரந்த⁴நாஶேஷு நைவ நஶ்யதி ஸூர்யபா⁴ ।**
**ததா² க்ஷேத்ரவிநாஶேஷு நைவ நஶ்யாமி ஸர்வக³: ॥ 35 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** <br> **யதா²** | = | எவ்விதம், |
| **सूर्यभा** <br> **ஸூர்யபா⁴** | = | சூரியபிரகாசம், |
| **तद्रज्जुरन्धनाशेषु** <br> **தத்³ரஜ்ஜுரந்த⁴நாஶேஷு** | = | அந்த ஊஞ்சல் சங்கிலியின் இடைவெளி நாசமான பொழுது, |
| **नैव नश्यति** <br> **நைவ நஶ்யதி** | = | அழிவதில்லையோ, |

| | | |
|---|---|---|
| **तथा**<br>**ததா²** | = | அவ்விதம், |
| **क्षेत्रविनाशेषु**<br>**க்ஷேத்ரவிநாஶேஷு** | = | சரீரங்களின் அழிவினுல், |
| **सर्वगः**<br>**ஸர்வக³:** | = | எங்கும் நிறைந்த நான், |
| **नैव नश्यति**<br>**நைவ நஶ்யதி** | = | அழிவதில்லை. |

சங்கிலியின் துவார நாசத்தினுல் ஸூர்ய கிரணங்கள் நாசத்தை அடைவதில்லை. அதுபோன்று சரீரங்களின் நாசத்தினுல் வியாபியான நான் அழிவதில்லை. **(35)**

**देहो नाहं प्रदृश्यत्वाद्भौतिकत्वान्न चेन्द्रियम् ।**
**प्राणो नाहमनेकत्वान्मनो नाहं चलत्वतः ॥ ३६ ॥**

**தே³ஹோ நாஹம் ப்ரத்³ருஶ்யத்வாத்³பௌ⁴திகத்வான்ன சேந்த்³ரியம் ।**
**ப்ராணோ நாஹமனேகத்வான்மனோ நாஹம் சலத்வத: ॥ 36 ॥**

**बुद्धिर्नाहं विकारित्वात्तमो नाहं जडत्वतः ।**
**देहेन्द्रियादिकं नाहं विनाशित्वाद्घटादिवत् ॥ ३७ ॥**

**பு³த்³தி⁴ர்ஞஹம் விகாரித்வாத்தமோ நாஹம் ஜட³த்வத: ।**
**தே³ஹேந்த்³ரியாதி³கம் நாஹம் விநாஶித்வாத்³க⁴டாதி³வத் ॥37॥**

| | | |
|---|---|---|
| **देहः**<br>**தே³ஹ:** | = | சரீரம், |
| **प्रदृश्यत्वात्**<br>**ப்ரத்³ருஶ்யத்வாத்** | = | பார்க்கப்படுகிறபடியால், |
| **अहं**<br>**அஹம்** | = | நான் (ஆத்மா), |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **इन्द्रियं च**<br>**இந்த்³ரியம் ச** | = | புலனும், |
| **भौतिकत्वात्**<br>**பௌ⁴திகத்வாத்** | = | பஞ்சபூதங்களால் உண்டாயிருப்பதால், |
| **अहं न**<br>**அஹம் ந** | = | ஆத்மா இல்லை, |

| | | |
|---|---|---|
| **प्राण:** | = | பிராணன், |
| **ப்ராண:** | | |
| **अनेकत्वात्** | = | பலவாக இருப்பதால், |
| **அனேகத்வாத்** | | |
| **अहं न** | = | ஆத்மா இல்லை, |
| **அஹம் ந** | | |
| **मन:** | = | மனது, |
| **மன:** | | |
| **चलत्वत:** | = | சலனமுள்ளதாகையால், |
| **சலத்வத:** | | |
| **अहं न** | = | ஆத்மா இல்லை, |
| **அஹம் ந** | | |
| **बुद्धि:** | = | புத்தி, |
| **பு³த்³தி⁴:** | | |
| **विकारित्वात्** | = | மாறுதலுடையதால், |
| **விகாரித்வாத்** | | |
| **अहं न** | = | ஆத்மா இல்லை, |
| **அஹம் ந** | | |
| **तम:** | = | அக்ஞானம், |
| **தம:** | | |
| **जडत्वत:** | = | அசேதனமானதால், |
| **ஜட³த்வத:** | | |
| **अहं न** | = | ஆத்மா இல்லை, (இவ்வாறு) |
| **அஹம் ந** | | |
| **देहेन्द्रियादिकं** | = | தேகம், இந்திரியம் முதலியன, |
| **தே³ஹேந்த்³ரியாதி³கம்** | | |
| **घटादिवत्** | = | குடம் முதலியவை போன்று, |
| **க⁴டாதி³வத்** | | |
| **विनाशित्वात्** | = | அழியும் தன்மையுடையதால், |
| **விநாஶித்வாத்** | | |
| **अहं न** | = | ஆத்மா இல்லை, |
| **அஹம் ந** | | |

பார்க்கப்படுவதால் நான் (ஆத்மா) சரீரமல்ல. பஞ்ச பூதங்களால் உண்டாகி இருப்பதால் இந்திரியங்களும் நானல்ல. பிராணன், அபானன் முதலான அநேகமாயி ருப்பதால் நான் பிராணனல்ல, சஞ்சலமுள்ளதாக இருப்பதால் மனதும் நானல்ல, மாறுதல் உடையதாயிருப்பதால் நான் புத்தியல்ல. ஜடமாயிருப்பதால் அக்ஞானம்

நானல்ல. இவ்விதம் குடம் போல் தேஹம் இந்திரியம் முதலானவை அழியக்கூடிய தாயிருப்பதால் அவை நானல்ல. **(36-37)**

## देहेन्द्रियप्राणमनोबुद्ध्यज्ञानानि भासयन् ।
## अहंकारं तथा भामि चैतेषामभिमानिनम् ॥ ३८ ॥

**தே³ஹேந்த்³ரியப்ராணமனோபு³த்³த⁴யஜ்ஞானானி பா⁴ஸயன் ।**
**அஹங்காரம் ததா² பா⁴மி சைதேஷாமபி⁴மானினம் ॥ 38 ॥**

| | | |
|---|---|---|
| **देहेन्द्रियप्राणमनोबुद्ध्यज्ञानानि**<br>**தே³ஹேந்த்³ரியப்ராணமனோபு³த்³த⁴யஜ்ஞானானி** | = | சரீரம், புலன்கள், பிராணன்கள், மனது, புத்தி, அக்ஞானம் இவைகளையும், |
| **तथा**<br>**ததா²** | = | அவ்விதமே, |
| **एतेषां**<br>**ஏதேஷாம்** | = | இவைகளில், |
| **अभिमानिनं**<br>**அபி⁴மானினம்** | = | நான் என்ற பற்றுதல் உள்ள, |
| **अहंकारं च**<br>**அஹங்காரம் ச** | = | அஹங்காரத்தையும், |
| **भासयन्**<br>**பா⁴ஸயன்** | = | பிரகாசிக்கச்செய்துகொண்டு, |
| **भामि**<br>**பா⁴மி** | = | நான் பிரகாசிக்கின்றேன். |

தேஹம், இந்திரியங்கள், பிராணன்கள், மனது, புத்தி அக்ஞானம் இவைகளையும், அவ்விதமே மேற்கூறியவைகளை நான் என்று எண்ணுகின்ற அஹங்காரத்தையும் (நான் என்ற விருத்தியோடு கூடிய அந்தக்கரணத்தையும்) பிரகாசிக்கச செய்துகொண்டு நான் ஸ்வயம் பிரகாசிக்கின்றேன். **(38)**

## सर्वं जगदिदं नाहं विषयत्वादिदंधियः ।
## अहं नाहं सुषुप्त्यादौ अहमः साक्षितः सदा ॥ ३९ ॥

**ஸர்வம் ஜக³தி³த³ம் நாஹம் விஷயத்வாதி³த³ந்தி⁴ய: ।**
**அஹம் நாஹம் ஸுஷுப்த்யாதௌ³ அஹம: ஸாக்ஷித: ஸதா³ ॥ 39 ॥**

| | | |
|---|---|---|
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லா, |

